## 16. வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா

(தரவு)

திருமேவு பதுமஞ்சேர் திசைமுகனே முதலாக
உருமேவி யவதரித்த உயிரனைத்து முயக்கொள்வான்
இவ்வுலகுங் கீழுலகும் மிசையுலகும் இருணீங்க
எவ்வுலகுந் தொழுதேத்த எழுந்தசெழுஞ் சுடரென்ன
விலங்குகதிர் ஓரிரண்டு விலங்கிவலங் கொண்டுலவ
அலங்குசினைப் போதிநிழல் அறமமர்ந்த பெரியோய்நீ.

(தாழிசை)

மேருகிரி இரண்டாகும் எனப்பணைத்த இரும்புயங்கள்
மாரவனி தையர்வேட்டும் மன்னுபுரம் மறுத்தனையே !

வேண்டினர்க்கு வேண்டினவே யளிப்பனென மேலைநாள்
பூண்டவரு ளாளநின் புகழ்புதிதாய்க் காட்டாதோ !

உலகுமிக மனந்தளர்வுற் றுயர்நெறியோர் நெறியழுங்கப்
புலவுநசைப் பெருஞ்சினத்துப் புலிக்குடம்பு
கொடுத்தனையே !

பூதலத்துள் எவ்வுயிர்க்கும் பொதுவாய திருமேனி
மாதவனீ என்பதற்கோர் மறுதலையாக் காட்டாதோ !

கழலடைந்த வுலகனைத்தும் ஆயிரவாய்க் கடும்பாந்தள்
அழலடைந்த பணத்திடையிட் டன்றுதுலை ஏறினையே !

மருள்பாரா வதமொன்றே வாழ்விக்க கருதியநின்
அருள்பாரா வதமுயிர்க ளனைத்திற்கு மொன்ருமோ !

(அராகம்)

அருவினை சிலகெட ஒருபெரு நரகிடை
எரிசுடர் மரைமலர் எனவிடு மடியினை.

அகலிடம் முழுவதும் அழல்கெட வமிழ்துமிழ்
முகில்புரி யிமிழிசை நிகர்தரு மொழியினை.

(ஈரடி அம்போதரங்கம்)

அன்பென்கோ ஒப்புரவென்கோ ஒருவ னயில்கொண்டு
முந்திவிழித் தெறியப்பால் பொழிந்தமுழுக் கருணையை.

நாணென்கோ நாகமென்கோ நன்றில்லான் பூணுந்
தீயினைப் பாய்படுத்த சிறுதுயில்கொண் டருளினை.

(ஓரடி அம்போதரங்கம்)

கைந்நாகத் தார்க்காழி கைகொண் டளித்தனையே!
பைந்நாகர் குலமுய்ய வாயமிழ்தம் பகர்ந்தனையே!
இரந்தேற்ற படையரக்கர்க் கிழிகுருதி பொழிந்தனையே!
பரந்தேற்ற மற்றவர்க்கு படருநெறி மொழிந்தனையே!

எனவாங்கு

(சுரிதகம்)

அருள்வீற் றிருந்த திருநிழற் போதி
முழுதுணர் முனிவநிற் பரவுதும் தொழுதக
ஒருமன மெய்தி இருவினைப் பிணிவிட
முப்பகை கடந்து நால்வகைப் பொருளுணர்ந்து
ஓங்குநீர் உலகிடை யாவரும்
நீங்கா இன்பமொடு நீடுவாழ் கெனவே.

———




## ஆசிரியரின் பிற நூல்கள்

1. பத்தொன்பதாம் நூற்றுண்டில் தமிழ் இலக்கியம்
2. இறைவன் ஆடிய எழுவகைத் தாண்டவம்
3. மறைந்துபோன தமிழ் நூல்கள்
4. தமிழர் வளர்த்த அழகுக் கலைகள்
5. துளு நாட்டு வரலாறு
6. பௌத்தமும் தமிழும்
7. சமணமும் தமிழும்
8. கிறித்துவமும் தமிழும்
9. மகேந்திரவர்மன் (சரித்திரம்)
10. நரசிம்மவர்மன் (சரித்திரம்)
11. மூன்ரும் நந்திவர்மன் (சரித்திரம்)
12. சேரன் செங்குட்டுவன் (சரித்திரம்)
13. பௌத்தக் கதைகள்
14. புத்த ஜாதகக் கதைகள்
15 சாஸனச் செய்யுள் மஞ்சரி
16. அஞ்சிறைத்தும்பி
17. சமயங்கள் வளர்த்த தமிழ்
18. உணவு நூல்
19. தொல்காப்பியத்தில் சில ஆய்வுரைகள்.
20. மனேன்மணீயம் (பொழிப்புரை)